# வள்ளி கல்யாணம்

அருணகிரிநாதஸ்வாமிகள் அருளிய
நவமணிகளாகத் திகழும் ஒன்பது
படைப்புகளிலிருந்து தொகுக்கப்பட்டது.



உருவந் தரித்துகந்து கரமும் பிடித்து வந்து
உறவும் பிடித்தணங்கை வனமீதே
ஒளிர் கொம்பினை சவுந்தரிய உம்பலை கொணர்ந்து
ஒளிர் வஞ்சியை மணக்கும் மணிமார்பன் முருகனுடன்
கன்னூஞ்சல் ஆடுகின்றாள்
வள்ளிப்பிராட்டி
கன்னூஞ்சல் ஆடுகின்றாள்.

# கல்யாண வைபவமே

குயில்மொழிக் கயல்விழி துகிர் இதழ் சிலை நுதல்
எழுதிட அரிய எழில் மடமகள் வஞ்சி
வள்ளி கல்யாண வைபவமே

வேலையன்பு கூரவந்த ஏகதந்த யானை கண்டு
வேடர் மங்கை ஓடி அஞ்ச அணைந்த வடிவேலன்
முருகன் கல்யாண வைபவமே

உ

ஓம் முருகா

# வள்ளி கல்யாணம்



அருணகிரிநாத ஸ்வாமிகளின் நவமணிகளாகத் திகழும்
ஒன்பது நூல்களிலிருந்து தொகுக்கப்பட்டது.

தொகுத்தவர்கள்

திருப்புகழ் அன்பர்கள்

கின்னங்குறித்து அடியேன் செவி
நீ அன்று கேட்கச் சொன்ன
குன்னங் குறிச்சி வெளியாக்கிவிட்டது
கோடுகுழல் சின்னங்குறிக்கக்
குறிஞ்சிக் கிழவர் சிறுமிதனை
முன்னங்குறிச்சியில் சென்று
கல்யாணம் முயன்றவனே.

(க.அ)



தேவகுஞ்சரி வள்ளி மணவாளன்

# வள்ளி கல்யாணம்

கல்யாணம் என்றாலே மனத்திலே மகிழ்ச்சியும் உற்சாகமும் ஏற்படுகிறது. கல்யாணங்களிலே கலந்து கொள்வதினால் அங்கு வந்துள்ள பல உறவினர்களையும் சிநேகிதர்களையும் சந்தித்து அளவளாவ ஒரு வாய்ப்பு ஏற்படுகிறது. நமது வீடுகளில் நடத்தப்படும் கல்யாணங்களைவிடப் பன்மடங்கு ஆனந்தம் நாம் வழிபடும் தெய்வங்களுக்கு நிகழ்த்தப்படும் கல்யாணங் களில் பெறமுடியும்.

பக்தி நெறியிலே நின்று ஆண்டவன் திருநாமங்களை ஹரி, ஹர, குஹ நாம சங்கீர்த்தனங்களாகப் பாடிவரும் அன்பர்கள் அவ்வப்போது சீதாகல்யாணம், ராதா கல்யாணம், மீனாக்ஷி கல்யாணம், ஆண்டாள் கல்யாணம் என்ற திருக் கல்யாணங்களையும் நடத்தி வருகின்றனர். இக் கல்யாணங்க ளெல்லாம் ஹரிபஜனை சம்ப்ரதாய முறையில் தோடய மங்களம், குருகீர்த்தனம், முத்துக்குத்தல், லக்னாஷ்டகம், கல்யாண நலுங்கு, கல்யாண அஷ்டபதி, டோலோத்ஸவம் என்ற வரிசையில் ப்ராசீன சம்ப்ரதாயப் பாடல் களின் மெட்டுகளில் பெரும்பாலும் வட மொழியிலும், தெலுங்கிலும் அமைந்துள்ளன.

''தமிழ்ப் பெருமாளான'' முருகன் திருக்கல்யாணத்தைத் தமிழ்ப் பாடல்களைக்கொண்டே நிகழ்த்த வேண்டும் என்பது பல அன்பர்களின் பேரவா. முருகனைப்பற்றிய தமிழ்ப் பாடல் களிலெல்லாம் தலை சிறந்து விளங்குவன அருணகிரிநாத ஸ்வாமிகளின் திருப்புகழ் முதலான பாடல்கள். முருகன் வள்ளியிடம் காட்டிய கருணையையும் அவளைத் தன்னுடன் சேர்த்துக்கொள்ள மேற்கொண்ட திருவிளையாடல்களையும் தமது நூல்களில் பெருவாரியாக அழகான தமிழில் விவரித்துள்ளார்.

திருப்புகழ் பாடிவரும் ''திருப்புகழ் அன்பர்கள்'' அருணகிரி நாதரின் எல்லாப் படைப்புகளிலும் உள்ள முருகன் திருநாமங்களையும், அவனது திருவிளையாடல்களையும் பாடிப் பாடி மனது அமைதி பெறுகின்றனர். மேலும் மேலும் முருகனது திருப்புகழ்ப் பாக்களைப் பாடவும் அவனது திருவிளையாடல்களை மீண்டும் மீண்டும் உள்ளத்திலே உணர்ந்து நினைவுகொள்ளவும் ''வள்ளி கல்யாண'' வைபவத்தை நிகழ்த்தி வருகிறார்கள்.

பொதுவான ப்ராசீன சம்ப்ரதாய பஜனை பத்ததியிலிருந்து சிறிது மாறுபட்டு முழுவதும் அருணகிரிநாதரின் நவமணிகளி லிருந்து தொகுத்து எடுத்த பாடல்களிலே ''வள்ளி கல்யாண''த் தை அமைத்துள்ளனர் ''திருப்புகழ் அன்பர்கள்''. திருப்புகழ் இசைவழிபாடு முறைப்படி ஆரம்பித்து விநாயகர், குரு வணக்கம், பரங்குன்று, செந்தூர், பழநி, சுவாமிமலை, திருத்தணி வரை திருப்புகழ்ப் பாக்களைப் பாடி கல்யாணம் ஆரம்பமா கிறது. திருத்தணியிலிருந்து தான் சீலமுலாவிய நாரதமுனி வந்துற்று ஈது அவள் வாழ் புனமாமென, மரகத மணிப்பணியின் அணிதழை உடுத்துலவும் வனசரர் கொடிச்சிதனை நாடியே, அந்நாயகி பைம்புனமது தேடி குறவாணர் குறிச்சியின் மிசையே போய், வேடுவர் புனத்தில் உருமாறி, கிழவனாய்ப்புக்கு நின்று, குருவி ஓட்டித்திரிந்த தவமானைக் குணமதாக்கி, பரம கணபதி, அயலின் மதகரி வடிவுகொடுவர, விரவு குறமகள் அபயமென, சிறந்த வடிவு காட்டி, கோடுகுழல் சின்னங்குறிக்க, குறிஞ்சிக் கிழவர் சிறுமிதனை குறிச்சியில் சென்று கல்யாணம் செய்து கொண்டான்.

முருகனைக் கல்யாண மண்டபத்திற்கு அழைத்தல், முருகனுக்கு வள்ளியையும், வள்ளிக்கு முருகனையும் அறிமுகம் செய்து வைத்தல், மாலை மாற்றல், ஊஞ்சல், அருணகிரிநாதரின் தமிழிலும், வடமொழியிலும் ப்ரவரங்கள் ஓதி கன்னிகாதானம் செய்வித்தல், கூறை அளித்தல் மாங்கல்யதாரணம், பாணி க்ரஹணம், சப்தபதி என்ற வரிசையில் அமைந்து கல்யாணம்

பூர்த்தியாகும். பின், முருகன், வள்ளி தெய்வயானை சமேதராக சர்வாலங்காரங்களுடன் கொலு வீற்றிருக்க, வள்ளிக்கும் முருகனுக்கும் வாழ்த்துக்கள் பாடித் தொடர்ந்து ஷோட சோபசாரங்களுடன் ஆராதனைகள் செய்து, முருகன் தர்பாரில் கலை நிகழ்ச்சிகளுக்குப்பின் மங்கள ஹாரத்தி, பிரார்த்தனைகள், சாந்தி கீதத்துடன் கல்யாண உத்ஸவம் இனிதே முடிவடையும்.

இம்மாதிரி நடத்தப்படும் ஹரி பஜனைகளும், திருப்புகழ் இசை வழிபாடுகளும், திருக்கல்யாணங்களும் அவைகளை நிகழ்த்துபவர்களுக்கும், அவற்றில் கலந்து கொள்பவர் களுக்கும் மனதிலே ஆண்டவனிடம் உள்ள பக்தியை வளர்த்துக் கொள்ளவும், உள்ளத்தின் அழுக்குகளையெல்லாம் நீக்கிக் கொள்ளவும் உதவுமேயானால், யாவருக்கும் பயனுள்ளதாக இருக்கும்.

நாமும் வள்ளியைப்போல் திடமான மனதுடன் முருகனையே அடைய வேண்டுமென்று அருணகிரிநாதர் காட்டிய ஆன்மீக நெறியிலே நின்று செயல்படுவோமே யானால், பரமாத்மாவான முருகன் வலியச் சென்று ஜீவாத்மா வான வள்ளியை குணமதாக்கித் தன்னிடம் சேர்த்துக் கொண்டது போல் நம்மையும் ஆட்கொள்வான். நமது உள்ளங்களிலே ஆன்மீகம் நிலைபெற்றிருக்க ஆண்டவன் அருளை வேண்டுவோம்.

இப்புத்தகத்தை கணிப்பொறியில் உருவாக்கித் தந்த திரு. சுந்தரராஜன் அவர்களுக்கும், வண்ணக்களஞ்சியமாக முகப்புப்படம் வரைந்து உதவிய ஓவியர் திரு கோபாலகிருஷ்ணன் அவர்களுக்கும் திருப்புகழ் அன்பர்களின் உளங்கனிந்த நன்றி உரித்தாகும்.

சென்னை
*17-3-2001*

**திருப்புகழ் அன்பர்கள்**

உ

# ஸ்ரீ வள்ளி திருக்கல்யாண மஹோத்ஸவம்

அருணகிரிநாத ஸ்வாமிகளின் நவமணிகளாகத் திகழும்
ஒன்பது நூல்களிலிருந்து தொகுக்கப்பட்டது

**திருப்புகழ் இசை வழிபாடு ஆரம்பம்**

முருகா முருகா முருகா முருகா
முருகா முருகா முருகா முருகா
முருகா முருகா முருகா முருகா
முருகா முருகா முருகா முருகா

| | |
|---|---|
| விநாயகர் | 4 பாடல்கள் |
| நாமாவளி | |
| குரு வணக்கம் | 1 பாடல் |
| திருப்பரங்குன்றம் | 1 பாடல் |
| திருச்செந்தூர் | 1 பாடல் |
| திருப்பழநி | 1 பாடல் |
| திருவேரகம் | 1 பாடல் |
| திருத்தணிகை | 4 பாடல்கள் |

# வள்ளி கல்யாணம் ஆரம்பம்

## முருகனை மண்டபத்திற்கு அழைத்தல்

நாமாவளி - சிவரஞ்சனி ஆதி

| | |
|---|---|
| வள்ளிக்கு வாய்த்தவனே | வா வா ஷண்முகா |
| அடியர் உள்ளம் கொள்ளை கொண்ட | அன்பனே நீ வா வா |
| ஆறுபடை வீடுடைய | ஆண்டவனே வா வா |
| இபமுகனின் இளையனான | இறைவனே நீ வா வா |
| ஈடிலாத அழகுடைய | ஈசனே நீ வா வா |
| உம்பர்கட்கு உவப்பளித்த | உத்தமனே வா வா |
| ஊனுமாகி உயிருமான | ஊழியனே வா வா |
| எத்திசையும் போற்றி வாழும் | எம்பிரானே வா வா |
| ஏழைகட்கிரங்கியாளும் | ஏரகனே வா வா |
| ஐவர் துயர் தீர்த்தருள | ஐயனே நீ வா வா |
| ஒன்றுமாகி பலவுமான | ஒருவனே நீ வா வா |
| ஓங்காரப் பொருளோனே | ஓடியே நீ வா வா |
| ஔவியம் தீர்த்தருள | ஆண்டவனே வா வா |
| அன்பனே | நீ வா வா |
| ஆறுமுகா | வா வா |
| இறைவனே | நீ வா வா |
| ஈசனே நீ | வா வா |
| உத்தமனே | வா வா |
| ஊழியனே | வா வா |
| எம்பிரானே | வா வா |
| ஏரகனே | வா வா |
| ஐயனே | நீ வா வா |
| ஒருவனே | நீ வா வா |
| ஓடியே | நீ வா வா |
| ஆடியே | நீ வா வா |
| வள்ளியை மணம்புரிய | வா வா ஷண்முகா |

வரவேணுமே மனோலயம் - ஆதி (திஸ்ரகதி)

வேல்முருகா, வேல்முருகா, வேல்முருகா, வேல்முருகா
வேல்முருகா. வேல்முருகா, வரவேணுமே
வரவேணுமே வரவேணுமே
வள்ளியை மணம்புரிய வரவேணுமே

1. மனத்தில் வருவோனே என்று உன் அடைக்கலமதாக வந்து
மலர்ப்பதமே பணிந்த முநிவோர்கள்
வரர்க்கும் இமையோர்கள் என்பர் தமக்கும் மனமே இரங்கி
மருட்டி வரு சூரை வென்ற முனைவேலா (வர)

2. சததள பார்த்திபர்க்கு அரி புருஷோத்தமர்க்கு
ஏரிகனல் ஏற்றவர்க்கு உணராதோர்
சகல சமார்த்த சத்திய வன சூக்ஷ
முக்கிய பரமார்த்தம் முற் புகல்வோனே (வர)

3. சங்கரன் உகந்து பரிவின் குருவெனும் சுருதி
தங்களின் மகிழ்ந்துருகும் எங்கள் கோவே
சந்திர முகஞ் செயங்கொள் சுந்தர குறம் பெணொடு
அன்புடன் மணம்புரிய வரவேணுமே (வர)

4. வண்டு படுகின்ற தொங்கல் கொண்டற நெருங்கி இண்டு
வம்பினை அடைந்து சந்தின் மிகமூழ்கி
வஞ்சியை முனிந்த கொங்கை மென்குற மடந்தை செங்கை
வந்தழகுடன் பிடிக்க வரவேணுமே (வர)

5. அரவில் விழிதுயில் முகுந்தன் அலர் கமல மலர் மடந்தை
அழகினொடு தழுவு கொண்டல் மருகோனே
அடல் அசுரர் உடல் பிளந்து நிணமதனில் முழுகி அண்ட
அமரர் சிறைவிடு ப்ரசண்ட மயில் வீரா (வர)

6. பொரு மதனை நீறு கண்ட அரிய சிவனார் உகந்த
புதிய மயில் ஏறு கந்த வடிவேலா
பனகமணி மா மதங்கி குமரி வெகு நீலி சண்டி
பரம கலியாணி தந்த பெருவாழ்வே (வர)

7. ஏலம் இலவங்க வர்க்க நாகம் வகுளம் படப்பை
பூக மருதந் தழைத்த கரவீரம்
யாவு மலை கொண்டுகைத்த காவிரி புறம்பு சுற்றும்
ஏரகம் அமர்ந்த பச்சை மயில்வீரா (வர)

8. திடமுள முகுந்தர் கஞ்சன் வரவிடு மெல் வஞ்சகங்கள்
செறிவுடன் அறிந்து வென்ற பொறியாளர்
பரிவொடு மகிழ்ந்திறைஞ்சு மருதிடை தவழ்ந்து நின்ற
பரமபத நண்பர் அன்பின் மருகோனே (வர)

9. பகர்வரியர் எனலாகும் உமை கொழுநர் உளமேவு
பரமகுரு என நாடும் இளையோனே
பணிலமணி வெயில்வீசு மணிசிகர மதிசூடு
பழநிமலை தனில் மேவு பெருமாளே (வர)

10. அரி அயன் அறிந்திடாத அடியிணை சிவந்த பாதம்
அடியென விளங்கி ஆடும் நடராஜன்
அழலுறும் இரும்பின் மேனி மகிழ் மரகதம் பெண் ஆகம்
அயல் அணி சிவன் புராரி அருள்சேயே (வர)

11. செழு வாரிஜத்தில் ஒன்று முது வேதன் வெட்க அன்று
திருவாய்மை செப்பி நின்ற முருகோனே
திரள் மாமணிக்குலங்கள் அருணோதயத்தை வென்ற
திருவேரகத்தமர்ந்த பெருமாளே (வர)

12. சித்தர்கள் நிடாதர் வெற்பின் கொற்றவர் சுவாமி பத்தர்
திக்குகள் ஓர் நாலிரட்டின் கிரிசூழச்
செக்கண் அரிமா கனைக்கும் சித்தணிகை வாழ் சிவப்பின்
செக்கர் நிறமாயிருக்கும் பெருமாளே (வர)

13. வெற்பளித்த தற்பரைக்கி டப்புறத்தை யுற்றளித்த
வித்தகத்தர் பெற்ற கொற்ற மயில்வீரா
வித்தை தத்வ முத்தமிழ்ச் சொல் அத்த சத்தம் வித்தரிக்கு
மெய்த் திருத்தணிப் பொருப்பில் உறைவோனே (வர)

14. அருணமணியாலமைத்த கிரணமணி சூழும் வெற்றி
அருணைநகர் கோபுரத்தில் உறைவோனே
அசுரர்குலம் வேரறுத்து வடவனலை மீதெழுப்பி
அமரர் சிறை மீளவிட்ட பெருமாளே (வர)

15. மடல் அவிழும் மாலை சுற்று புயம் இருபதோடு பத்து
மவுலியற வாளி தொட்ட அரிராமன்
மருக பல வானவர்க்கும் அரிய சிவனார் படிக்க
மவுன மறை ஓதுவித்த குருநாதா (வர)

16. கோளுலவு முப்புரத்தை வாளெரி கொளுத்தி விட்ட
கோபநுதலத்தர் அத்தர் குருநாதா
நீபமலர் பத்தி மெத்த வோதுமவர் சித்தமெத்த
நீலமயில் தத்த விட்டு வரவேணுமே (வர)

17. பரகிரி உலாவு செந்தில் மலையினுடனே இடும்பன்
பழநி தனிலேயிருந்த குமரேசா
பதிகள் பலவாயிரங்கள் மலைகள் வெகுகோடி நின்ற
பதம் அடியர் காணவந்த கதிர்காமா (வர)

18. கணகணென வீர தண்டை சரணமதிலே விளங்க
கலப மயில் மேலுகந்த குமரேசா
கறுவி வரு சூரனங்கம் இருபிளவதாக விண்டு
கதறிவிழ வேல் எறிந்த முருகோனே (வர)

19. துளபமணி மார்ப சக்ரதரன் அரி முராரி சர்ப்ப
துயிலதரன் ஆதரித்த மருகோனே
சுருதி மறை வேள்வி மிக்க மயிலைநகர் மேவும் உக்ர
துரகத கலாப பச்சை மயில்வீரா (வர)

20. வால சந்த்ர சூடி சந்த வேத மந்த்ர ரூபி அம்பை
வாணி பஞ்சபாணி தந்த முருகோனே
வேல் ஐ அன்பு கூர வந்த ஏகதந்த யானை கண்டு
அஞ்சும் மங்கையை மணக்க வரவேணுமே (வர)

21. முருக பொரு சூரர் சேனை முறிய வடமேரு வீழ
முகர சலராசி வேக முனிவோனே
மொழியும் அடியார்கள் கோடி குறை கருதினாலும் வேறு
முனிய அறியாத தேவர் பெருமாளே (வர)

22. வாலை துர்க்கை சக்தி அம்பை லோக கத்தர் பித்தர் பங்கில்
மாது பெற்றெடுத்து கந்த சிறியோனே
வாரி பொட்டெழ க்ரௌஞ்சம் வீழ நெட்டயிற்றுரந்த
வாகை மற்புய ப்ரசண்ட மயில் வீரா (வர)

23. உனதுமுக கருணை மலர் ஓராரும் ஆறிருகை
திரள் புயமும் எழில் பணிகொள் வார் காதும் நீள் விழியும்
உபய பத மிசை குலவு சீரேறு நூபுரமொடு
அழகு பொலியாளாய் நீ வரவேணுமே (வர)

24. சந்தனம் புனைந்த கொங்கை கண்களும் சிவந்து பொங்க
சண்பகம் புனம் குறம்பெண் குறைதீர
தந்தனந்த செஞ்சிலம்பு கிண்கிணின் குலங்கள் கொஞ்ச
தண்டையம் பதம் புலம்ப வரவேணுமே (வர)

25. சந்தனந் திமிர்ந்தணைந்து குங்குமம் கடம்பிலங்கு
சண்பகஞ் செறிந்திலங்கு திரள்தோளும்
தண்டையஞ் சிலம்பலம்ப வெண்டையஞ் சலன்சலென்று
சஞ்சிதஞ் சதங்கை கொஞ்ச வரவேணுமே (வர)

26. கோல உருவாயெழுந்து பார் அதனையேயிடந்து
கூவிடு முராரி விண்டு திருமார்பன்
கூடமுறை நீடு செம்பொன் மாமதலையூடெழுந்த
கோப அரி நாரசிங்கன் மருகோனே (வர)

27. அதலசேடனார் ஆட அகில மேரு மீதாட
அபின காளி தானாட அவளோடன்று
அதிர வீசி வாதாடும் விடையில் ஏறுவார் ஆட
மயிலுமாடி நீயாடி வரவேணுமே (வர)

28. மதுரவாணி தான் ஆட மலரில் வேதனார் ஆட
மருவு வானுளோர் ஆட மதியாட
வனஜ மாமியார் ஆட நெடிய மாமனார் ஆட
மயிலுமாடி நீயாடி வரவேணுமே (வர)

29. வயிரிசை முழக்க மிகு மழைதவழ் குறிச்சிதொறும்
மகிழ் குரவையுள் திரியும் வேடிக்கை வேடுவனே
தினமிசை சுகம் கடிந்த புனமயில் இளங்குறத்தி
மனம் மகிழ் மணம் புரிய வரவேணுமே (வர)

30. அதிரவீசி ஆடும் வெற்றி விடையில் ஏறும் ஈசர் கற்க
அரிய ஞான வாசகத்தை அருள்வோனே
விளையுமோக போக முற்றி அளவிலாத காதல் பெற்ற
குறமகளை நீ மணக்க வரவேணுமே (வர)

31. பூரணமதான திங்கள் சூடும் அரனாரிடங்கொள்
பூவை அருளால் வளர்ந்த முருகோனே
பூவுலகெலாமடங்க ஓரடியினாலளந்த
பூவை வடிவானுகந்த மருகோனே (வர)

32. பஞ்சரங் கொஞ்சுகிளி வந்து வந்தைந்து கர
பண்டிதன் தம்பியெனும் வயலூரா
சென்று முன் குன்றவர்கள் தந்தபெண் கொண்டு வளர்
வள்ளியை மணம்புரிய வரவேணுமே (வர)

33. வடவரை யுற்றுறைந்த மகதேவர் பெற்ற கந்த
மதசல முற்ற தந்தி இளையோனே
குடமென வொத்த கொங்கை குயில்மொழியொத்த இன்சொல்
குறமகளை நீ மணக்க வரவேணுமே (வர)

## முருகன் - வள்ளி அறிமுகம்

### முருகன்

எழுதரிய ஆறுமுகமும், மணிநுதலும்
வயிரமிடையிட்டுச் சமைந்த செஞ்
சுட்டிக் கலன்களும், துங்க நீள்
பன்னிரு கருணை விழிமலரும், இலகு
பதினிரு குழையும், ரத்னக் குதம்பையும்
பத்மக் கரங்களும், செம்பொனூலும்,
மொழி புகழும் உடைமணியும்

அரைவடமும், அடியிணையும், முத்தச்
சதங்கையும், சித்ரச் சிகண்டியும்,
செங்கை வேலும், முழுதும் அழகிய குமரன்
(எங்கள் முருகன் அம்மா வள்ளிநாயகியே)

அம்மா - எங்கள் முருகன்
மந்தாகிநித் தரங்க சடிலருக்கு அரிய
மந்த்ர உபதேசம் நல்கும் வரதேசிகன்
கிஞ்சுகச் சிகாலங்கார
வாரணக் கொடி உயர்த்தோன்

கொந்தார் மலர்க் கடம்பும் செச்சை மாலையும்
குவளையும் செங்காந்தளும்
கூதாள மலருந் தொடுத்தணியும் மார்பினன்

தண்டந் தநு திகிரி சங்கு கட்கங் கொண்ட
தானவாந்தகன் மாயவன்
தழல்விழிக் கொடுவரி பருவுடற் பஃறலைத்
தமனியச் சுடிகையின் மேல்
வண்டொன்று கமலத்து மங்கையும்
கடல் ஆடை மங்கையும் பதம் வருடவே
மதுமலர்க் கண் துயில் முகுந்தன் மருகன்
எங்கள் முருகன்

தேவி பார்ப்பதி சேர் பரபாவனார்க்கு ஒரு ஜாக்ர
அதீத தீக்ஷை பரீக்ஷைகள் அற ஓதும் தேவன்
மேவினார்க்கு அருள் தேக்கு
துவாதசாக்ஷ ஷடாக்ஷரன்
மேரு வீழ்த்த பராக்ரம வடிவேலன்
(எங்கள் முருகன் அம்மா வள்ளி நாயகியே)

**அவன்**

விபுத தாரகன், விபுத திவாகரன், விபுத தேசிகன், விபுத சிகாமணி, விபரித கஞ்ச விரிஞ்ச பராமுகன், அபிநவ கந்தன், அடைந்தவர் தாபரன், மேருவை யிடிபட மோதும் சங்க்ரம தாரகன், மகுட விபாடன், புங்கவன் வெயிலுமிழ் கொடியொடு வினை முகத்தினின் மயில்மிசை வருமொரு வரதன், நிர்ப்பயன், வித்தகன், சுவாமி, நிர்ப்பாவகன், சத்யன், ப்ரதாப வித்யாதரன் விரத நட்பாளர் பரியும் அசஞ்சலன், நிருத நிஷ்டூரன், நிருதர் பயங்கரன், வீரமத லோகவேள் காங்கேயன், சூர ரண சூர சூராந்தகன், வினைப்பகை செகுப்பவன், நினைப்பவை முடித் தருள் க்ருபைக் கடல், சிவந்த கமலச் சரவணத்து அறுமுகப் பொருள், செகத்ரயம் முகிழ்த்த உதர த்ரிபுரைக்கு ஒரு திருப் புதல்வன், உற்பல கிரிப்பெயர் தரித்தருள் திருத்தணி மலைக்கு இறையவன்

*(எங்கள் முருகன் அம்மா வள்ளி நாயகியே)*

**வள்ளி**

செம்பொன் நூபுர கமலமும், ம்ருகமத குங்குமாசல யுகளமும், மதுரித இந்தளாம்ருத வசனமும், முறுவலும், அபிராம இந்த்ர கோப மரகத வடிவமும், இந்த்ர சாபமும், இரு குழையொடு பொரு இந்த்ர நீலமும் உடையவள், செண்பகாடவியலும் இதணினும் உயர் சந்தனாடவி யிலும் உறை குறமகள்

*(எங்கள் வள்ளிநாயகி, முருகா)*

**அவள்**

பெரும் பைம்புனத்தினுள் சிற்றேனல் காக்கின்ற பேதை, நல்ல கொல்லியைச் சேர்க்கின்ற சொல்லி, கல்வரை கொவ்வைச் செவ்வாய் வல்லி, தேனென்று பாகென்று உவமிக் கொணா மொழித் தெய்வ வள்ளி, சுந்தரவல்லி, கத்திய தத்தை களைத்து விழ கற்கவண் விட்டெறி தினை காவல் கற்ற குறத்தி, கற்பு

வழுவாது வெற்படியின் மேவு கற்றை மறவாணர் கொடி, நெற்றாப் பசுங்கதிர் செவ்வேனல் காக்கின்ற பேதை வள்ளி, சுனையைக் கலக்கி விளையாடும் சொரூபக் குறத்தி

(எங்கள் வள்ளிநாயகி, முருகா)

அவள்

அழகு மோகக் குமரி, விபுதை ஏனற் புனவிஅளிகுலாவுற்ற சேர் கடம்புத் தொடை அரசி, வேதச் சொரூபி, கமல பாதக்கரவி, அரிய வேடச்சிறுமி

(எங்கள் வள்ளிநாயகி, முருகா)

மஞ்சு போல் வளர் அளகமும் இளகிய ரஞ்சிதாம்ருத வசனமும் நிலவென வந்த தூய வெண் முறுவலும், இருகுழை அளவோடும் மன்றல் வாரிஜ நயனமும், அழகிய குன்ற வாணர் தம் மடமகள்

(எங்கள் வள்ளிநாயகி, முருகா)

## மாலை மாற்றல்

திலங் ஆதி (திஸ்ர கதி)

மாலை சூட்டினாள் வள்ளி மாலை சூட்டினாள்
மாலை சூட்டினாள் வள்ளி மாலை சூட்டினாள்
மாலை சூட்டினாள் வள்ளி மாலை சூட்டினாள்
மாலை சூட்டினாள் வள்ளி மாலை சூட்டினாள்

வள்ளி

முதலி பெரியம்பலத்துள் வரையசல மண்டபத்துள்
முனிவர் தொழ அன்று நிர்த்தம் ஆடினான் முருகனுக்கு

மாலை சூட்டினாள் வள்ளி மாலை சூட்டினாள்
மாலை சூட்டினாள் வள்ளி மாலை சூட்டினாள்

முருகன்

மாலை மாற்றினான் முருகன் மாலை மாற்றினான்
மாலை மாற்றினான் முருகன் மாலை மாற்றினான்
குயில் மொழி கயல் விழி, துகரிதழ் சிலைநுதல்
சசிமுகத்தி குறவர் மகள் வள்ளிப் பிராட்டிக்கு

மாலை மாற்றினான் முருகன் மாலை மாற்றினான்
மாலை மாற்றினான் முருகன் மாலை மாற்றினான்

வள்ளி

மாலை சூட்டினாள் வள்ளி மாலை சூட்டினாள்
மாலை சூட்டினாள் வள்ளி மாலை சூட்டினாள்
சுருதிகள் உரைத்த வேதம் உரை மொழி தனக்குள் ஆதி
சொலுஎன உரைத்த ஞான குருநாதன் முருகனுக்கு

மாலை சூட்டினாள் வள்ளி மாலை சூட்டினாள்
மாலை சூட்டினாள் வள்ளி மாலை சூட்டினாள்

முருகன்

மாலை மாற்றினான் முருகன் மாலை மாற்றினான்
மாலை மாற்றினான் முருகன் மாலை மாற்றினான்
அழகு மோகக் குமரி விபுதை ஏனற் புனவி
அரிய வேடச் சிறுமியான வள்ளிப் பிராட்டிக்கு

மாலை மாற்றினான் முருகன் மாலை மாற்றினான்
மாலை மாற்றினான் முருகன் மாலை மாற்றினான்

வள்ளி

மாலை சூட்டினாள் வள்ளி மாலை சூட்டினாள்
மாலை சூட்டினாள் வள்ளி மாலை சூட்டினாள்
திருத்தணியில் உதித்தருளும் ஒருத்தன் மலை விருத்தன்
எனதுளத்திலுறை கருத்தன் மயில் நடத்துகுகன் வேலனுக்கு

மாலை சூட்டினாள் வள்ளி மாலை சூட்டினாள்
மாலை சூட்டினாள் வள்ளி மாலை சூட்டினாள்

**முருகன்**

மாலை மாற்றினான் முருகன் மாலை மாற்றினான்
மாலை மாற்றினான் முருகன் மாலை மாற்றினான்
மறுவிலாத தினைவிளைந்த புனம் விடாமல் இதணிருந்து
கிளிகடிந்து காவல்கொண்ட வள்ளிப் பிராட்டிக்கு

மாலை மாற்றினான் முருகன் மாலை மாற்றினான்
மாலை மாற்றினான் முருகன் மாலை மாற்றினான்

**வள்ளி**

மாலை சூட்டினாள் வள்ளி மாலை சூட்டினாள்
மாலை சூட்டினாள் வள்ளி மாலை சூட்டினாள்
கொல்லை மிசை வாழ்கின்ற வள்ளிபுனமே சென்று
கொய்து தழையே கொண்டு செல்லும் வடிவேலனுக்கு

மாலை சூட்டினாள் வள்ளி மாலை சூட்டினாள்
மாலை சூட்டினாள் வள்ளி மாலை சூட்டினாள்

**முருகன்**

மாலை மாற்றினான் முருகன் மாலை மாற்றினான்
மாலை மாற்றினான் முருகன் மாலை மாற்றினான்
எயினர் இடும் இதணதனில் இளகுதினை கிளி கடிய
இனிது பயில் சிறுமியான வள்ளி பிராட்டிக்கு

மாலை மாற்றினான் முருகன் மாலை மாற்றினான்
மாலை மாற்றினான் முருகன் மாலை மாற்றினான்

**வள்ளி**

மாலை சூட்டினாள் வள்ளி மாலை சூட்டினாள்
மாலை சூட்டினாள் வள்ளி மாலை சூட்டினாள்

செய்ய துய்ய புள்ளி நவ்வி
செல்வி கல்வரையில் ஏனல்
தெய்வ வள்ளி மையல் கொள்ளும்
செல்லப் பிள்ளை முருகனுக்கு

மாலை சூட்டினாள் வள்ளி மாலை சூட்டினாள்
மாலை சூட்டினாள் வள்ளி மாலை சூட்டினாள்

**முருகன்**

மாலை மாற்றினான் முருகன் மாலை மாற்றினான்
மாலை மாற்றினான் முருகன் மாலை மாற்றினான்
கிஞ்சுகம் எனச் சிவந்த தொண்டயள் மிகக் கறுத்த
கெண்டையள், புனக்கொடி மறச் சிறுமி வள்ளிக்கு

மாலை மாற்றினான் முருகன் மாலை மாற்றினான்
மாலை மாற்றினான் முருகன் மாலை மாற்றினான்

**வள்ளி**

மாலை சூட்டினாள் வள்ளி மாலை சூட்டினாள்
மாலை சூட்டினாள் வள்ளி மாலை சூட்டினாள்
ஆலமொன்று வேலையாகி ஆனை அஞ்சல் தீரு மூல
ஆழி அங்கை ஆயன் மாயன் மருகனான முருகனுக்கு

மாலை சூட்டினாள் வள்ளி மாலை சூட்டினாள்
மாலை சூட்டினாள் வள்ளி மாலை சூட்டினாள்

முருகன்

மாலை மாற்றினான் முருகன் மாலை மாற்றினான்
மாலை மாற்றினான் முருகன் மாலை மாற்றினான்
மரகத மணிப்பணியின் அணிதழை உடுத்துலவும்,
வரிசிலை மலைக்குறவர் வேடிச்சி வள்ளிக்கு

மாலை மாற்றினான் முருகன் மாலை மாற்றினான்
மாலை மாற்றினான் முருகன் மாலை மாற்றினான்

மாலை சூட்டினாள் வள்ளி மாலை சூட்டினாள்
வேடனான முருகனுக்கு மாலை சூட்டினாள்
வேங்கையான முருகனுக்கு மாலை சூட்டினாள்
கிழவனான முருகனுக்கு மாலை சூட்டினாள்

மாலை சூட்டினாள் வள்ளி மாலை சூட்டினாள்
மாலை மாற்றினான் முருகன் மாலை மாற்றினான்

## ஆடிலூஞ்சல்

1. அரகர சிவாய சம்பு குருபர குமார நம்பும்
அடியர்தமை ஆளவந்த பெருமாள்
நவநீதமும் திருடி உரலோடெ ஒன்றும் ஹரி
ரகுராமர் சிந்தை மகிழ் மருகன் (ஆடில்)

2. மலையிறை மடந்தை பெற்ற ஒரு மதலை என்றுதித்து
மலையிடியவுந் துணித்த தோளினான்
நீறுபட மாழைபொரு - மேனியவ வேலன்
அணி நீலமயில்வாகன் உமைதந்த பாலன் (ஆடில்)

3. பன்றியங் கொம்பு கமடம் புயங்கஞ் சுரர்கள்
பண்டை யென் பங்க மணிபவர் சேய்
திங்களும் செங்கதிரு மங்குலந் தங்குமுயர்
தென்பரங் குன்றிலுறை பெருமாளே (ஆடில்)

4. ஜெகமுழுது முன்பு தும்பி முகவனொடு தந்தை முன்பு
திகிரி வலம் வந்த செம்பொன் மயில் வீரன்
இனிய கனி மந்தி சிந்து மலை கிழவ செந்தில் வந்த
இறைவன் குகன் கந்தன் என்றும் இளையோன் (ஆடில்)

5. பகர்வரியர் எனலாகும் உமை கொழுநர் உளமேவு
பரமகுரு என நாடும் இளையோன்
பணில மணி வெயில் வீசு மணிசிகர மதிசூடு
பழநிமலை தனில் மேவு பெருமாள் (ஆடில்)

6. சில காவியத் துறைகள் உணர்வோர் படித்த தமிழ்
செவியார வைத்தருளும் முருகோன்
சிவனார் தமக்குரிய உபதேச வித்தையருள்
திருவேரகத்தில் வரு பெருமாள் (ஆடில்)

7. வீராணம் வெற்றி முரசோடே தவில் திமிலை
வேதாகமத்தொலிகள் கடல்போல்
வீறாய் முழக்க வரு சூராரிறக்க விடும்
வேலன் திருத்தணியில் பெருமாள் (ஆடில்)

8. சூரர் கிளையே தடிந்து பாரமுடியே யரிந்து
தூள்கள் பட நீறுகண்ட வடிவேலன்
சோலை தனிலே பறந்துலாவு மயிலேறி வந்து
சோலைமலை மேலமர்ந்த பெருமாள் (ஆடில்)

9. வல்லைக் குமார கந்தன் தில்லைப் புராரி மைந்தன்
மல்லுப் பொராறிரண்டு புய வீரன்
வள்ளிக் குழாமடர்ந்த வள்ளிக் கல்மீது சென்று
வள்ளிக்கு வேடைகொண்ட பெருமாள் (ஆடில்)

10. ஆடுமரவும் பிறையும் நீரும் அணியும் சடையர்
ஆதிபரவும்படி நினைந்த குருநாதன்
ஆறுமுகமுங்குரவும் ஏறுமயில் குறவி-
யாறும் உரமுந் திருவும் அன்பும் உடையோன் (ஆடில்)

வேல்முருக வேல்முருக வேல் வேல் வேல்
வேல்முருக வேல்முருக வேல்
வேல்முருக வேல்முருக வேல்முருக வேல்முருக
வேல்முருகன் ஆடிலூஞ்சல்

11. கங்காளி, சாமுண்டி, வாராகி, இந்த்ராணி
கௌமாரி கமலாசனக்
கன்னி நாரணி குமரி த்ரிபுரை பயிரவி அமலை
கௌரி சுதன் ஆடிலூஞ்சல்

12. சிங்காரி, யாமளை பவானி கார்த்திகை கொற்றி
த்ரியம்பகி அளித்த செல்வச்
சிறுவன் அறுமுகன் முருகன் நிருதர்கள் குலாந்தகன்
வள்ளியுடன் ஆடிலூஞ்சல்

13. தாதார் மலர்சுனைப் பழனிமலை சோலைமலை
தனிப்பரங் குன்றேரகம்
தணிகை செந்தூரிடைக்கழி ஆவினங்குடி
முருகனுடன் ஆடிலூஞ்சல்
வள்ளி முருகனுடன் ஆடிலூஞ்சல்

14. வண்டொன்று கமலத்து மங்கையும்
கடலாடை மங்கையும் பதம் வருடவே
மதுமலர்க் கண்துயில் முகுந்தன்
மருகன் கந்தன் வள்ளியுடன் ஆடிலூஞ்சல்

15. நகல்கோடி கொண்டவுணர் நெஞ்சம் பிளந்த
நரகேசரி முராரி திருமால்
நாரணன், கேசவன், ஸ்ரீதரன்
மருகனுடன் வள்ளியும் ஆடிலூஞ்சல்
(முருகன் வள்ளியுடன் ஆடிலூஞ்சல்)

## கன்னூஞ்சல்

கன்னூஞ்சல் ஆடுகின்றாள் வள்ளிப் பிராட்டி
கன்னூஞ்சல் ஆடுகின்றாள்

1. ஆன பயபக்தி வழிபாடு பெறுமுக்தி அதுவாக நிகழ்
பக்தஜன வாரக்காரனும்
ஆயிரமுகத்து நதி பாலனும் அகத்தடிமையானவர்
தொடுத்த கவிமாலைக்காரன் முருகனுடன் (கன்னூஞ்சல்)

2. யானென தெனச் சருவும் ஈன சமயத்தெவரும்
யாரும் உணர்தற்கரிய நேர்மைக்காரனும்
யாது நிலையற்றலையும் ஏழுபிறவிக்கடலை
ஏறவிடு நற்கருணை ஓடக்கார முருகனுடன்(கன்னூஞ்சல்)

3. யாமளை மணக்குமுக சாமளை மணிக்குயிலை
ஆயென அழைத்துருகும் நேயக்காரனும்
ஏதமற நிச்சய மனோலய விளக்கொளியும்
யாகமுனிவற்குரிய காவற்கார முருகனுடன் (கன்னூஞ்சல்)

4. வாழி என நித்தம் மறவாது பரவில் சரண -
வாரிஜம் அளிக்கும் உபகாரக்காரனும்
மாசிலுயிருக்குயிரும் ஆசில் உணர்வுக்குணர்வும்
வானிலணுவுக்கணு உபாயக்கார முருகனுடன்
(கன்னூஞ்சல்)

5. வேலை துகள்பட்டு மலை சூரனுடல் பட்டுருவ
வேலையுற விட்ட தனிவேலைக்காரனும்
வேதியர் வெறுக்கையும் அநாதி பரவஸ்துவும்
விசாகனும் விகற்ப வெகுரூபக்கார முருகனுடன்
(கன்னூஞ்சல்)

6. வேடுவர் புனத்தில் உருமாறி முனிசொற்படி
வியாகுல மனத்தினொடு போம் விற்காரனும்
மேவிய புனத்திதணில் ஓவியமெனத்திகழும்
மேதகு குறத்தி திருவேளைக்கார முருகனுடன்
(கன்னூஞ்சல்)

7. கணகணென வீரதண்டை, சரணமதிலே விளங்க
கலபமயில் மேல் உகந்த குமரேசன்
கறுவிவரு சூரனங்கம் இருபிளவதாக விண்டு
கதறிவிழ வேலெறிந்த முருகன், குமரனுடன்
(கன்னூஞ்சல்)

8. உருவந் தரித்து உகந்து கரமும் பிடித்து வந்து
உறவும் பிடித்தணங்கை வனமீதே
ஒளிர் கொம்பினை சவுந்தரிய உம்பலைக் கொணர்ந்து
ஒளிர் வஞ்சியை மணக்கும் மணிமார்பன் முருகனுடன்
(கன்னூஞ்சல்)

## கல்யாண ஆரம்பம்

வள்ளி கல்யாண வைபவமே
முருகன் கல்யாண வைபவமே

1. மாதினை மேனி வைத்த நாதனுமோது பச்சை
மாயனும் ஆதரிக்கும் மயில்வீரன்
(முருகன் கல்யாண)

2. எயினர் இடும் இதணதனில் இளகுதினை கிளி கடிய
தினை காவல் கற்ற குற மடமாது
(வள்ளி கல்யாண)

3. அண்டர் வாழப் பிரபை சண்டமேருக் கிரியை
அளைந்து வீழப் பொருத கதிர்வேலன்
(முருகன் கல்யாண)

4. கலக இரு பாணமும் திலகவொரு சாபமும்
களப மொழியாத கொங்கை குறமாது
(வள்ளி கல்யாண)

5. வேலையன்பு கூரவந்த ஏகதந்த யானை கண்டு
வேடர் மங்கை ஓடி அஞ்ச அணைந்த வடிவேலன்
(முருகன் கல்யாண)

6. திருமால் அளித்தருளும் ஒருஞான பத்தினி
விதியானவன் இளையாள் திருமகள் குமாரி
(வள்ளி கல்யாண)

7. குயில்மொழிக் கயல்விழி துகிர் இதழ் சிலை நுதல்
எழுதிட அரிய எழில் மடமகள் வஞ்சி
(வள்ளி கல்யாண)

8. தாதகி, செண்பகம், பூகமார், மந்தாரம்,
வாசந்தி அணியும் எங்கள் புனமேவும் வஞ்சி
(வள்ளி கல்யாண)

## ப்ரவரம்

### முருகன்

1. மேனை அறிவைக்குரிய பேரன் மதித்த திறல் வீரன்

2. சோமகலசப் ப்ரபாலங்காரதர, ஜடாசூடி காலாந்த காலர், துங்க ரக்ஷக த்ரோண கட்க குலிசம்சூல, துரக கேசரமாம்பர சேம வடவாம்புயப் பரண சங்காபரண திகம்பர, த்ரயம்பக மகாதேவன், சடிலதரன், விடதரன், பணிதரன், பரசுதரன், சசிதரன், சுசிதரன், வித தமருகதரன், மிருகதரன், வனிதரன், சிரதர பார தரணிதரன், தநுதரன், வெகுமுக குலதடினிதரன் அரி, அயன் நித்தம் வந்து பூஜிக்கும் அரன், சதாசிவ கோத்திரன், கனிஷ்ட புத்ரன்

3. அருண கண பண புயக சுடிகையின் அகில புவனமும் உதவும் மலைமகள், அமலை ஆரியை, அந்தரி, சுந்தரி, இமய மாமயில், அம்பை, த்ரியம்பகி அச்சுத சகோதரி, அனைத்து வேதத்தலைவி, அற்புத புராதனி, வர ப்ரகாசப் ப்ரக்ருதி அம்பொற் குண்டலப் பேதை, சாம்பவி விம்பக் கிஞ்சுகப் பூவை பூங்கொடி அக்ஷர லக்ஷ ஜபத்தர் க்ரமத்திடு சக்ரதலத்தி, த்ரியக்ஷி, ஷடாக்ஷரி கரைபொழி திருமுக கருணையில் உலகெழு கடல் நிலைபெற வளர் காவேந்திய பைங்கிளி மாசாம்பவியை ஆயென அழைத்துருகும் முருகன்.

4. குஞ்சர மாமுக விக்ந ப்ரபு அங்குச பாசகர ப்ரசித்தன் ஓர் கொம்பன் மகோதரன் முக்கண் விக்ரம கணராஜன் கும்பிடு வார் வினைப்பற்றறுப்பவன் குன்றனைய ரூபக கற்பகப் பிள்ளை இளையோன்

5. சிறுத்த செலுவதனுலிருந்து பெருத்த திரை உததி கரந்து செறித்த மறை கொணர நிவந்த ஜயமால், வரி அரவின்

முடிமிசை நடமிடும் பாத மாயவன் எழுபுவி அளவிடு
வரதன் மாதவன் இரணியன் உடல் இரு பிளவாக வகிரும்
மால் அரி, திகிரியன் அலை எறி தமர வாரிதி முறையிட
நிசிசரன் மகுடமானவை ஒருபதும் விழ ஒருகணை ஏவும்
கரிய மேனியன் மருதொடு பொருதவன் வேயிசை கொடு
நிரை பரவிடும் அபிராமன் கருணை நாரணன் மருகன்

**வள்ளி**

*1.* ஆரணற்கு மறை தேடியிட்ட திருமால்
அளித்தருள் ஞான சுந்தரவல்லி

*2.* விதியானவனின் இளையவள் வனசர
மரபினில் வருமொரு மரகத வள்ளி

*3.* மாதாநுபங்கியெனும் மாலது சகோதரி
மகீதரி, கிராதகுலி, மா மறை முனி குமாரி
சாரங்கம் தனிவந்த வள்ளி மணி நூபுர
பாதாரவிந்த முடையாள்

*4.* ஏலமாம் யானையின் கோடதிற் சொரி முத்தும்
மின்பனைகள் உமிழும் முத்தும் இனிவாடை
மான்மதம் அகிலோடு சந்தனம், இலவங்க நறவம்
ஆரும் தால மாமரம் முதல் பொருள்
படைத்திடும் எயினர் தரு வனிதை வள்ளி நாயகி

## ப்ரவரம்

### முருகன்

சதுர்வேத சாகாத்யாயினே, ஸர்வ ஸ்ருதி ஸ்மிருதி புராண இதிகாச சாஸ்த்ரகம்யாய ஸகலதேவ தானவ முனிகண வந்தித சரணார விந்தாய த்ரிபுவனாதீஸ்வராய அகிலாண்டகோடி ப்ரம்மாண்ட நாயகாய தத்வாதீதாய, பராத்பராய, ஹிமோத்கிரி வாஸினே, சரவணோத்பவாய, ப்ரணவார்த்த தத்வோப தேசிகாய, அமித தேஜோமயாய பரப்ரும்ம ஸ்வரூபாய, கணபதி ஸோதராய, ஸ்ரீபரமேஸ்வர கனிஷ்ட புத்ராய, ஸ்ரீ சுப்ரமண்ய வர்மணே, சாக்ஷாதாத்ம ஸ்வரூபாய, வராய

### வள்ளி

சதுர்வேத சாகாத்யாயினீம், ஸக்ருத் ப்ரபன்ன ஸம்ரக்ஷணீம், அகிலாண்ட கோடி ப்ரம்மாண்ட நாயகீம், பங்கஜ தாரிணீம் மணிலஸத் தாடங்க கர்ணோஜ்வலாம், சரவண பவஸ் ஸவ்யே ஸ்திதாம், ஸ்ரீ மஹா விஷ்ணு அம்ஸ பூதாம், ஸ்ரீநம்பி ராஜ ஸங்கல்ப தனயாம், ஸ்ரீ வள்ளி நாம்னீம் இமாம் கன்யாம்

### கன்னிகாதானம்

கன்யாம் கனக ஸம்பன்னாம் ஸர்வாபரண பூஷிதாம்
தாஸ்யாமி ஸ்கந்தாய துப்யம் ப்ரம்ம லோகம் ஜீகிஷய

வெற்றிவேல் முருகனுக்கு ஹரஹரோஹரா
திருத்தணிகை தீரனுக்கு ஹரஹரோஹரா
வனசரர் கொடிச்சிதனை
யாசித்த வேலனுக்கு ஹரஹரோஹரா
வெற்றிவேல் முருகனுக்கு ஹரஹரோஹரா

**வள்ளிக்கு கூறையளித்தல்**

நவோநவோ பவதி ஜாயமானோன்ஹாம்கேது ருஷஸா மேத்யக்ரே। பாகங்தேவேப்யோ விததாத்யாயன் ப்ரசந்த்ரமா ஸ்திரதி தீர்க்கமாயு: ॥ ஸுமங்கலீரியம், வதூரிமாகும், ஸமேதபச்யத । ஸௌபாக்யமஸ்மை தத்வாயாதாஸ்தம் விபரேதன । இமாம் த்வமிந்த்ர மீட்வஸ்ஸுபுத்ராகும் ஸுபகாம் குரு । தசாஸ்யாம் புத்ரானாதேஹி பதிமேகா தசம் க்ருதி ॥

திருப்புகழ் - 2 பாடல்கள்

**மாங்கல்ய தாரணம்**

*மாங்கல்யம் தந்துநாநேந மம ஜீவன ஹேதுநா ।*

*கண்டே பத்நாமி ஸுபகே த்வம் ஜீவ (ஜகத்ஜீவ) சரதச்சதம் ॥*

**கெட்டிமேளம்**

| | |
|---|---|
| வெற்றிவேல் முருகனுக்கு | ஹரஹரோஹரா |
| திருப்பரங்கிரி வேலனுக்கு | ஹரஹரோஹரா |
| செந்தில் ஆண்டவனுக்கு | ஹரஹரோஹரா |
| ஆவினங்குடி வேலனுக்கு | ஹரஹரோஹரா |
| சுவாமிமலைப் பெருமாளுக்கு | ஹரஹரோஹரா |
| திருத்தணிகை தீரனுக்கு | ஹரஹரோஹரா |
| சோலைமலை கிழவனுக்கு | ஹரஹரோஹரா |
| வெற்றிவேல் முருகனுக்கு | ஹரஹரோஹரா |

**பாணிக்ரஹணம்**

**சப்தபதி**

**7 திருப்புகழ்**

| | |
|---|---|
| காஞ்சி | சிதம்பரம் |
| திருவானைக்கா | வள்ளிமலை |
| அருணை | சோலைமலை |
| காளஹஸ்தி | |

## ஆசீர்வாதம் - வாழ்த்துகள்

சிந்து பைரவி　　　　　　　　　　　　　　　　　　　　மிச்ரசாபு

வேல்முருகா வேல்முருகா வேல்முருகா வேல்முருகா
வேல்முருகா வாழி என்றே வாழ்த்துகின்றோமே

1. தீயிசைந்தெழவே யிலங்கையில்
ராவணன் சிரமே யரிந்தவர்
சேனையுஞ் செல மாள வென்றவன் மருகோனே
உனை வாழ்த்துகின்றோமே

2. முடியகொடு முடியசுரர் பொடிபட
முடுகு மரகத மயில்வீரா
குறவர் மடமகள் அமுத கன தன
குவடு படுமொரு திருமார்பா
உனை வாழ்த்துகின்றோமே

3. நாலுவேத முடாடு வேதனை
யீன கேசவனார் சகோதரி
நாதர் பாகம் விடாள் சிகாமணி உமைபாலா
உனை வாழ்த்துகின்றோமே

4. வரையை முனிந்து விழவெ கடிந்து
வடிவே லெறிந்த திறலோனே
மதுரித செஞ்சொல் குற மடமங்கை
நகிலது பொங்க வரும் வேலா
உனை வாழ்த்துகின்றோமே

5. கொண்டலார் குழல் கெண்டைபோல் விழி
கொண்டுகோகில மொழி கூறும்
கொங்கையாள் குறமங்கை வாழ்தரு
குன்றில் மால்கொடு செலும் வேலா
உனை வாழ்த்துகின்றோமே

6. ஓமத்தீ வழுவார்கட்கூர்சிவ
லோகத்தே தரு மங்கை பாலா
நீலக்ரீப கலாப தேர்விடு
நீபச் சேவக செந்தில் வாழ்வே
உனை வாழ்த்துகின்றோமே

7. பரம கணபதி அயலின் மதகரி
வடிவு கொடுவர விரவு குறமகள்
அபயமென அணை முருகோனே
உனை வாழ்த்துகின்றோமே

8. ஆலமுண்டவர் சோதி அங்கணர்
பாகம் ஒன்றிய வாலை அந்தரி
ஆதி அந்தமுமான சங்கரி குமரா
உனை வாழ்த்துகின்றோமே

9. பாதிமதிநதி போது மணிசடை
நாதரருளிய குமரேசா
பாகு கனிமொழி மாது குறமகள்
பாதம் வருடிய மணவாளா
உனை வாழ்த்துகின்றோமே

10. மாதினைப்புன மீதிருக்கும் மை
வாள் விழி குற மாதினைத் திரு
மார்பணைத்த மயூரா
உனை வாழ்த்துகின்றோமே

11. கோத்த வேலையில் ஆர்த்த சூர்பொரு
வேற் சிகாவல கொங்கில் வேளே
பூட்டுவார் சிலை கோட்டு வேடுவர்
பூட்கை சேர் குற மங்கை பாகா
உனை வாழ்த்துகின்றோமே

12. கானகக் குறமாதை மேவிய
ஞான சொற்குமரா பராபர
காசியில் பிரதாபமாயுறை பெருமாளே
உனை வாழ்த்துகின்றோமே

13. கரிதிரு முகமுமிட முடைவயிறும்
உடையவர் பிறகு வருவோனே
கனதனமுடைய குறவர்தம் மகளை
கருணை யோடணையும் மணிமார்பா
உனை வாழ்த்துகின்றோமே

14. தினைச் செங்கானக வேடுவரானவர்
திகைத்து அந்தோ எனவே கணியாகிய
திறற் கந்தா வளிநாயகி காமுறும் எழில் வேலா
உனை வாழ்த்துகின்றோமே

15. குரவணி பூஷண சரவண தேசிக
குக கருணாநிதி அமரேசா
குறமகள் ஆனைமின் மருவிய பூரண
குருகிரி மேவிய பெருமாளே
உனை வாழ்த்துகின்றோமே

16. வனத்தில் வந்தொரு பழையவனென வொரு
குறத்தி மென்புன மருவிய கிளிதனை
மயக்கி மந்திர குருமலை தனிலமர் பெருமாளே
உனை வாழ்த்துகின்றோமே

17. அரிய கானகம் உறை குறமகளிட
கணவனாகிய அறிவுள விதரண
அமரர் நாயக சரவணபவ திறல் உடையோனே
உனை வாழ்த்துகின்றோமே

18. தினைப்புனத்து இரு தனகிரி குமரி நல்
குறத்தி முத்தொடு சசிமகளொடு புகழ்
திருத்தணிப் பதி மலைமிசை நிலைபெறு பெருமாளே
உனை வாழ்த்துகின்றோமே

19. அடவிசரர்குல மரகத வனிதையும்
அமரர் குமரியும் அனவரதமும் அருகு
அழகுபெற நிலைபெற வரம் அருளிய பெருமாளே
உனை வாழ்த்துகின்றோமே

20. அருவி இழிதரும் அருவரை தனிலொரு
சவர வனிதையை முநிதரு புனிதையை
அவசமுடன் மலர் அடி தொழுதுருகிய பெருமாளே
உனை வாழ்த்தகின்றோமே

21. தருண மணி அவை பல பல செருகிய
தலையள் துகிலிடை அழகிய குறமகள்
தனது தனமது பரிவொடு தழுவிய பெருமாளே
உனை வாழ்த்துகின்றோமே

22. துடிமுழவு மறவரிட சேவற் காட்டினில்
துணை மலரின் அணுகி தினை காவற் காத்தனை
கரிய குழல் குறமகளை வேளை காத்து அணை பெருமாளே
உனை வாழ்த்துகின்றோமே

23. அழகு சோபித அங்கொளும் ஆனன
விபுதை மோகி குறிஞ்சியின் வாழ்வள்ளி
அருள் கொடாடி சிதம்பரம் மேவிய பெருமாளே
உனை வாழ்த்துகின்றோமே

24. மாண் ப்ரகாச தனங்கிரி சுந்தர
மேய்ந்த நாயகி சம்பை மருங்கு பொன்
வார்ந்த ரூபி குறம்பெண் வணங்கிய முருகோனே
உனை வாழ்த்துகின்றோமே

25. வனத்தே வேடுவர் மாதாம் ஓர் மினை
எடுத்தே தான் வரவேதான் யாவரும்
வளைத்தே சூழவும் ஓர் வாளால் வெலும் விறல்வீரா
உனை வாழ்த்துகின்றோமே

26. வேலை அன்புகூர வந்த ஏகதந்த யானைகண்டு
வேடர் மங்கை ஓடி அஞ்ச அணைவோனே
உனை வாழ்த்துகின்றோமே

27. கொச்சை மொழிச்சி கறுத்த விழிச்சி
சிறுத்த இடைச்சி பெருத்த தனத்தி
குறத்தி தனக்கு மனப்ரிய முற்றிடு குமரேசா
உனை வாழ்த்துகின்றோமே

28. சேணொணாயிடு இதன் மேல் அரிவையை
மேவியே மயல்கொள லீலைகள் செய்து
சேர நாடிய திருடா அருள்தரு கந்த வேளே
உனை வாழ்த்துகின்றோமே

29. புன மலையில் குறமகள் அயலுற்றொரு
கிழவனெனச் சுனைதனில் அவளைப் புய
புளகித முற்றிபம் வர அணையப்புணர் மணிமார்பா
உனை வாழ்த்துகின்றோமே

30. மலைதனில் ஒரு முநி தந்த மாதுதன்
மலரடி வருடியே நின்று நாள்தொறு
மயில் பயில் குயில் கிளி வம்பிலே கடி தொண்டினோனே
உனை வாழ்த்துகின்றோமே

31. தினைவன நித்தம் காவலாளியள்
நகைமுறை முத்தின் பாவை மான்மகள்
திகழ் பெற நித்தம் கூடி ஆடிய பெருமாளே
உனை வாழ்த்துகின்றோமே

32. தினைப்புனந்தனிலே மயலாலொரு
மயிற் பதந்தனிலே சரணானென
திருப்புயந்தரு மோகன மானினை அணைவோனே
உனை வாழ்த்துகின்றோமே

33. அரிய கானக மேவு குறத்திதன்
இதணிலே சில நாளு மனத்துடன்
அடவி தோறுமெ வாழியல் பத்தினி மணவாளா
உனை வாழ்த்துகின்றோமே

34. கடிய காட்டகம் உறையும் வேட்டுவர்
கருதொணாக் கணி வேங்கையாகிக்
கழைசெய் தோள் குறமயிலை வேட்டுவர்
களவினாற் புணர் கந்தவேளே
உனை வாழ்த்துகின்றோமே

35. வேடு கொண்டுள வேடா வேடைய
வேழ வெம்புலி போலே வேடர்கள்
மேவு திண்புன மீதே மாதொடு
வேடை கொண்ட பிரானே
உனை வாழ்த்துகின்றோமே

36. குறவர் இடு தினைவனமிசை இதணிடை
மலையுமரையொடு பசலைகொள் வளர்முலை
குலவு குறமகள் அழகொடு தழுவிய மணவாளா
உனை வாழ்த்துகின்றோமே

37. முருக, அபிநவ வனசரர் கொடியிடை
தளர வளர் வன ம்ருகமத பரிமள
முகுள புளகித தனகிரி தழுவிய மணவாளா
உனை வாழ்த்துகின்றோமே

38. கருணை நாரணன் நரபதி சுரபதி
மருக, கானகம் அதனிடை மருவிய
கரிய வேடுவர் சிறுமியொடுருகிய மணவாளா
உனை வாழ்த்துகின்றோமே

39. மருவிலாத தினை விளைந்த புனம் விடாமல் இதணிருக்க
வலிய காவல்புனை அணங்கே உனை வாழ்த்துகின்றோமே
வாழ்த்துகின்றோமே வாழ்த்துகின்றோமே
உனை வாழ்த்துகின்றோமே
வாழி, வாழி, வாழி என்றே வாழ்த்துகின்றோமே

**அநுபூதி**

திருப்பழநி வகுப்பு
வேல், மயில், சேவல் விருத்தங்கள்

**ஆராதனை**

மாத்ருகா புஷ்பம்
அர்ச்சனை *(108 திருப்புகழ் வரிசை)*
தூபம்
தீபம்
நைவேத்யம்
மந்த்ர புஷ்பம்

**உபசாரம்**

வேதங்கள்
கீதம்
வாத்யம்
நிருத்யம்
ஸ்வஸ்தி
மங்கள ஹாரத்தி - ஏறுமயிலேறி

**பிரார்த்தனை**

முருகா, முருகா, முருகா, முருகா
சாந்தி கீதம்

**சுபம்**

ஏறுமயி லேறிவிளை யாடுமுக மொன்றே

ஈசருடன் ஞானமொழி பேசுமுக மொன்றே

கூறுமடி யார்கள்வினை தீர்க்குமுக மொன்றே

குன்றுருவ வேல்வாங்கி நின்றமுக மொன்றே

மாறுபடு சூரரை வதைத்தமுக மொன்றே

வள்ளியை மணம்புணர வந்தமுக மொன்றே

ஆறுமுக மானபொருள் நீயருளல் வேண்டும்

ஆதியரு ணாசல மமர்ந்த பெருமாளே.

தாதை காதில் அங்கு ஓதும்
சிங்கார முகம் ஆறும்

வாகுவுங் கூர
சந்தான சுக தாரி
மார்பலங்காரி
என் பாவை வளி
எங்கள் மாதை

தாரு பாளிதஞ் சோர
சிந்தாமணிகள் ஆட
மணந்த முருகோனே

உன்னை வாழ்த்துகின்றோமே



பரம குரு அருள் நினைந்திட்டு
உணர்வாலே
பரவு தரிசனையை என்றற்கு
அருள்வாயே